# சொற்றமிழ் சூடுவார்

*August 20, 2009*

- முனைவர் கோ.ந. முத்துக்குமாரசுவாமி



"நமக்கும் **அன்பில்** பெருகிய சிறப்பில் மிக்க
**அர்ச்சனை பாட்டே யாகும்** ஆதலால் மண்மேல் நம்மைச்
**சொற்றமிழ் பாடுக** என்றார் தூமறை பாடும் வாயார்"

என நம்பியாரூரரைச் சிவபெருமான் பணித்தான் எனப் பெரியபுராணம் கூறுகின்றது.

தூமறை பாடும் வாயாருக்கு நாள்தோறும் அன்பினொடு சொற்றமிழ் சூட்டுவோர் ஓதுவார் எனப்படுவர். தமிழ்நாட்டில் உள்ளபழமையான சிவன் திருக்கோயில்களில் நாள் வழிபாட்டின்போது காதலாகிக் கசிந்து கண்ணீர் மல்கத் திருமுறை விண்ணப்பம் செய்வோர் ஓதுவார் எனப்பட்டனர். ஓதுவார் பரம்பரை வரலாற்றுப் பழமையானது. சங்ககால பாணர் மரபு " யாழ்முறிய பாண்மடிய" என நம்பியாண்டார் நம்பிகள் கூறுமாறு திருஞான சம்பந்தப் பெருமானாரது காலத்துக்குப் பின் மறைந்தது. அதன் பின்னர்த் தமிழிசையின் தொன்மையையும் அடையாளத்தையும் மரபையும் ஓதுவார் பரம்பரையே தாங்கி நிற்கின்றது.

பேணிக் காப்பாரின்றி எண்ணற்ற சிவன் கோயில்கள் தமிழகத்தில் சிதிலமடைந்து வருவதுபோல ஓதுவார் பரம்பரையும் போற்றுவாறின்றி மங்கி வருகின்றது. வரலாற்றுச் சிறப்பு மிக்க இந்த ஓதுவார் பரம்பரைக்குப் புத்துணர்ச்சியூட்டி அழிந்து போகாமல் காப்பதற்கு உரிய முயற்சிகளும் அவ்வப்போது மேற்கொள்ளப் படுகின்றது.

பூம்புகார், தாசில்தார்பண்ணை திரு.இராஜசேகரன் என்னும் தமிழறிஞர், **"சொற்றமிழ் சூடுவார்" (தமிழக ஓதுவாமூர்த்திகளின் வரலாறும், திருமுறைப் பணிகளும்)** என்னும் நூலினை எழுதித் தாமே வெளியிட்டுள்ளார். இந்நூலில் ஓதுவார்களின் நீண்ட நெடிய தொன்மையையும் அவர்கள் தோற்றுவித்த இசைப் பாரம்பரியத்தையும் புகழ்மிக்க ஓதுவார்களின் வாழ்க்கையையும் அவர்களின் ஆசிரியர் மாணாக்கர் பாரம்பரியத்தையும், இப்பாரம்பரியத்தைக் காப்பாற்றி வந்த நிறுவனங்களையும் மிகச் சுவையாகவும் ஓரளவு விரிவாகவும் பதிவு செய்துள்ளார். இது ஓதுவார் பரம்பரையைக் குறித்த சிறந்த ஆவணம்.

தேவாரம் ஓதுகின்ற பரம்பரை, தேசிகர் எனும் இனமாக மலர்ந்தது. திருமுறை ஓதுதலேயன்றி தேசிகர்கள் சைவக் குடும்பத்தினருக்கு வைதிகக் காரியங்களையும் செய்து வந்துள்ளனர். ஆச்சாரிய அபிடேகம் பெற்றுப் பிற, சைவ இனத்தவருக்குக் குருவாகவும் இருந்துள்ளனர். திருமுறை இந்த வகையில் திராவிட வேதம் என்னும் உரிமைக்கு உரியதாயிற்று. திராவிட வேதம் பயின்ற தேசிகர்கள் மறையோதும் அந்தணர்களுக்குச் சமமாகச் சைவர்களால் மதிக்கப்பட்டனர்.

இந்த நூலில் திருமுறையோதும் தேசிகர் மரபும் பொன்னோதுவார் மூர்த்திகள், நெல்லை சுந்தரமூர்த்தி ஓதுவார் போன்ற தேவார ஓதுவார் மரபும் எம்.எம் தண்டபாணி தேசிகர், குடந்தை சுந்தரேசனார் போன்ற பண்ணிசைவாணர்களின் மரபும் விரிவாக எடுத்துக் காட்டப்பட்டுள்ளன இந்த முயற்சி மேற்கொள்ளப்பட்டிராது போயிருந்தால் ஓதுவார் பலரின் பேரும் புகழும் மறைந்தே போயிருக்கக் கூடும்.

இந்த நூலின் ஆசிரியர் திரு இரா. இராஜசேகரன் அவர்கள். வழக்கறிஞர். இவர் சைவம், திருமுறைகள் ஆகியவற்றின் மேல் உள்ள காதலால் இந்தவரலாற்று ஆவணத்தைத் தயாரித்து வெளியிட்டுள்ளார். இதற்கு முன்னும் சிறிய அளவில் கட்டுரையாகவும் ஒலிநாடாவாகவும் ஓதுவாமூர்த்திகளின் வரலாற்றைப் பதிவு செய்யும் முயற்சிகள் நடந்துள்ளன. அவற்றை உரிய முறையில் நன்றியுடன் இவர் பயன்படுத்திக் கொண்டார்.

சென்ற நூற்றாண்டில் சமய உணர்ச்சிமிக்க செல்வர்கள் தேவாரப் பள்ளிகளை நாடெங்கும் தோற்றுவித்து திருமுறையிசையை வளர்த்தனர். தேவாரப்பாடசாலையில் தேவார இசை மட்டுமேயன்றி உலகியலுக்கு வேண்டும் கணிதம் முதலிய பாடங்களும் கற்பிக்கப்பட்டன. பொன்னோதுவா மூர்த்திகள் பட்டுச்சாமி ஓதுவார் போன்றோர் தமிழ் இலக்கிய இலக்கணங்களிலும் வல்லோராகத் திகழ்ந்தனர்.

திருமுறை இசையில் ஈடுபாடு கொண்டோர் பெருமைப்படத்தக்க பல செய்திகள் இந்நூலில் உள்ளன. தற்காலத்தில் திருமுறை இசையில் ஈடுபாடு கொண்டோர் கைக்கொள்ளத்தக்க மரபுகளும் புகழ்மிக்க ஓதுவார்களின் வரலாற்றைக் கூறும் போக்கிலேயே இந்நூலில் எடுத்துக் காட்டப்பட்டுள்ளன.

"செயல்முறை ஆவணம்" என்ற பகுதியில், தமிழ்வேதத்தின் ஆக்கங் கருதி இனிச் செய்ய வேண்டுவன பற்றி ஆசிரியர் கூறும் கருத்துக்களை திருமுறைகளில் ஈடுபாடு கொண்டோர் மனத்தில் இருத்த வேண்டுவனவாகும்.

இனி இந்நூலைப் படித்தபோது என் சிந்தனையில் எழுந்த சிலகருத்துக்களைப் பகிர்ந்து கொள்ள விரும்புகின்றேன். இதில் கொடுக்கப்பட்டுள்ள சில தகவல்களின் உண்மையைப் பற்றி எனக்குச் சந்தேகம் எழுகின்றது. பொய் ஒன்றைப் பலரும் பலமுறை பலசந்தர்ப்பங்களிற் கூறுவதால், பொய், உண்மை போன்ற வேடம் அணிந்து கொள்ளுகின்றது.

ஓதுவார்களின் பெருமைகளை எடுத்தோதும் இந்த நூலில் தேவையில்லாமல் மறைவாகவும் சில இடங்களில் வெளிப்படையாகவும் பிராமண, வடமொழிப் பகைமை வெளிப்படுகின்றது. அதனால் உண்மைக்கு மாறான பொய்ச்செய்திகள் உண்மைபோலப் பேசப்பட்டு இந்த நூலுக்குக்கு உரிய பெருமையைக் குறைக்கின்றன.


தேசிகர்

திருவையாறு தியாகராஜசுவாமிகள் ஆராதனையில் திரு எம்.எம். தண்டபாணிதேசிகர் கலந்துகொண்டபோது நிகழ்ந்த சம்பவம் குறித்து இந்நூலாசிரியர் எழுதியுள்ளது குறித்து எனக்குச் சில ஐயங்கள் உண்டு. அந்த நிகழ்ச்சி எந்த ஆண்டு நிகழ்ந்தது என்று கூறாமல் 'ஒருசமயம்' என்றே கூறப்பட்டுள்ளது.

தியாகராஜசுவாமிகள் ஆராதனையில் தேசிகர், "சித்தி விநாயகனே" என்ற தமிழ்ப் பாடலைப்பாடி நிகழ்ச்சியைத் தொடங்கினார் என்றும் அதற்கு அங்குள்ள வித்துவான்கள் பெரும் கண்டனமும் எதிர்ப்பும் எழுப்பினார்கள் என்றும் அவர்களில் அரியக்குடி இராமாநுஜ ஐயங்கார் அவர்களும் ஒருவர் என்றும் அன்றைய நிகழ்ச்சிக்குச் செட்டி நாட்டரசர் இராஜா அண்ணாமலைச் செட்டியார் அவர்கள் தலைமையேற்றிருந்தார் என்றும் இந்நிகழ்ச்சி தமிழிசை இயக்கத்திற்கும் இசைத்தமிழ் எழுச்சிக்கும் தமிழிசைச்சங்கம் தொடங்குவதற்கும் உந்துதலை – உணர்வினை ஏற்படுத்தியது என்றும் இந்நூலாசிரியர் எழுதியுள்ளார். (நான் அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தில் பயின்றவன். அப்பொழுது திரு தேசிகர் அவர்கள் இசைக்கல்லூரி முதல்வராக இருந்தார். இசை ஆர்வத்தால் நான் இசைக்கல்லூரி நிகழ்ச்சிகளுக்குத் தவறாமல் செல்லுவேன். வைகல் ஞானஸ்கந்தன், விஜயலட்சுமி ஞானஸ்கந்தன், தாராபுரம் சுந்தரராஜன் முதலியோர் அப்பொழுது அங்கு பயின்றனர். 'சித்தி விநாயகனே'(இராகம்?) என்றபாடலைப்பாடி தேசிகர் பாடித் தொடங்கிய இசை நிகழ்ச்சி ஒன்றுகூட நானறியேன். )

இந்த நூலை எழுதியவர் தியாகராஜர் ஆராதனை விழாநிகழ்ச்சிகளை, நிகழ்முறைகளை நேரில் கண்டறிந்திடாதவர் என்றே எனக்குத் தோன்றுகின்றது.

முதலில் அன்றைய விழா தியாகராஜர் ஆராதனை என்பதை கவனத்தில் இருத்தவேண்டும். தியாகராஜர் ஆராதனை என்பது பொதுவான 'சபா' இசை நிகழ்ச்சியல்ல. ஆராதனை என்பது வழிபாடு. ஞானசம்பந்தப் பிள்ளையார் குருபூசையில் முதன் மூன்று திருமுறைகளை விண்ணப்பிக்காமல் வேறுபாடல்களைப் பாடச் சைவர்கள் சம்மதிப்பார்களா? அருணகிரிநாதர் ஆராதனையில் அருணகிரிநாதர் அருளிச்செயல்களையே பாடுதல் வேண்டும். மாணிக்கவாசகர் ஆராதனையில் திருவாசகமே ஓதுதல் வேண்டும்.

அரசியல்வாதிகள் இல்லத்திருமணத்தில்தான் தலைவர்கள் மணமக்களை வாழ்த்துதலை விட்டு விட்டு அரசியலைப் பேசி நிகழ்ச்சியைப் பாழடிப்பர்.

தியாகராசர் ஆராதனையில், இராக ஆலாபனையும் சுரங்களும் பாடக்கூடாது. கீர்த்தனைகளையே பக்திச்சுவையுடன் பாடவேண்டும் என்பது நடைமுறையில் கடைப்பிடிக்கப்பட்டு வருகின்றது.. ஆராதனையில் தமிழ்ப் பாட்டென்ன, முத்துசாமிதீட்சிதர், ஸ்யாமா சாஸ்திரிகளின் கீர்த்தனைகளும் கூடப் பாடுவதில்லை. இந்த இங்கிதம் தண்டபாணிதேசிகருக்கு இல்லை என்பது ஆசிரியர் கருத்தா? தேசிகர் அத்தகைய இங்கிதம் தெரியாதவர் அல்லர்.

இந்த நிகழ்ச்சி உண்மையெனின், அங்கு ஒரு ஒருசலசலப்பும் முணுமுணுப்பும் ஏற்பட்டிருக்கும். அதற்குக் காரணம் வெளிப்படை. அந்த எதிர்ப்பு எத்தகையதாக இருந்தது என ஆசிரியர் கூறவில்லை.

தேசிகருக்குப் பெருமை சேர்ப்பதாக ஆசிரியர் கருதிக்கொண்டு சிறுமையே சேர்த்துள்ளார்.

எதிர்ப்புத் தெரிவித்தோர் கூட்டத்தில் அரியக்குடியும் இருந்தார் என விதந்து கூறியதில், மறைமுகமான பிராமணதுவேஷமும் உள்ளது. அரியக்குடியார் தமிழிசைக்குச் செய்துள்ள தொண்டு இசைவேட்கை உள்ளவர்கள் அறிவர். திருப்பாவை, அருணாசலக் கவிராயரின் இராமநாடக் கீர்த்தனை முழுவதற்கும் சுவரமும் மெட்டும் அமைத்து இசையரங்குளில் அரங்கேற்றியவர் அரியக்குடியார். தமிழிசைச் சங்க நிகழ்ச்சிகளிலும் பங்கேற்றுள்ளார்.



இந்த ஐயத்திற்குரிய நிகழ்ச்சியை , 'வார்த்தை' ஆகஸ்ட் மாத இதழ் எதிர்வினையில் ஒருவர், "கட்டுரை ஆசிரியர் தமிழை நீசபாஷை சூத்திர பாஷை என்று சொன்னவர்களை அறியமாட்டார். திருவையாறு தியாகராஜ உற்சவத்தில் தண்டபாணி தேசிகர் தமிழில் பாடி சந்நிதானத்தைத் தீட்டாக்கிவிட்டார் என்று சொன்னார்கள்" என்று எழுதி உள்ளார். எந்த ஒரு வதந்தியும் எழுத்தில் வந்துவிட்டால் அதற்கொரு நம்பகத்தன்மை ஏற்பட்டுவிடுகின்றது. உண்மையை அறிந்தவர்கள் அவ்வுண்மையைத் தங்களுக்குள் வைத்துக் கொள்கின்றனர் அல்லது அருகில் உள்ளவர்களுக்கு மட்டும் அறிவிக்கின்றனர். நாளடைவில் பொய்மை வென்றுவிடுகிறது.

உ.வே.சா அவர்கள் தம்முடைய நல்லுரைக்கோவை என்னும் நூலில், சவுக்ககாலத்தில் தேவாரம் பாடவும் 'ரக்தி' சங்கீதத்தில் பயிற்சி ஏற்படவும் பண்டைநாளில் ஓதுவார்களுக்கு முத்துசுவாமி தீட்சிதரின் கீர்த்தனைகளும் சில கற்பிக்கப்படும் என்று எழுதியுள்ளார்கள்.

இந்தக்கருத்துக்குச் சொல்லப்பட்ட விமரிசனம் உ.வேசா அவர்களும் தீட்சிதரும் பிறந்த சாதிமேற் கூறப்பட்ட விமரிசனமாகத்தான் உள்ளது. திருமுறை இசையைக் காட்டிலும்

தீட்சிதரின் கீர்த்தனைகளில் இசை வெகுதூரம் வளர்ந்துவிட்டது என்பதும் தீட்சிதர் கீர்த்தனைகள் திருமுறைகளுக்கு எதிரானவை அல்ல என்பதும் தீட்சிதர் சுந்தரமூர்த்தி நாயனார் மேல் பத்திகொண்டு அவரைப் போற்றி ‘டக்கா’ என்னும் அபூர்வராகத்தில் ஒருகீர்த்தனை இயற்றியுள்ளார் என்பதும் இந்தப்புத்தகத்தை எழுதியவர் அறியாத செய்திகள்.

இந்த நூல் எழுதிய ஆசிரியர், ஓதுவார்களுக்கும் திருமுறைகளுக்கும் இந்தநூலை எழுதியதன்மூலம் அரிய தொண்டு ஆற்றியுள்ளார் எனினும் பொறாமையால் அல்லது துவேஷத்தால் எழுந்த பொய்த்தகவல்களைத் தருவதால் கரியும் பூசியுள்ளார்.

**குறிச்சொற்கள்:** ஓதுவார்கள், கோயில், சிவன், தமிழிசை, தாளம், திருமுறை, திருமுறைகள், துதிப்பாடல், தேவாரம், பாடல், புத்தகப் பார்வை, புத்தகம், வழிபாடு